58

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – சித்திரை – 2017 – ஏப்ரல்

ரிஷிகேஷில் நடைபெறும் கோவிலூர் மாதிரி மாண்டிசோரிப் பள்ளி மாணவச் செல்வங்கள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - சித்திரை - 2017 - ஏப்ரல்    இதழ் - 58



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மணிவண்ணத் திருமேனி மாமாயன் பின்பிறந்த
மங்கைஅப ரஞ்சிஎழில் மயிலின் சாயல்
மான்போல மருண்டவிழி மகர்த்த கூந்தல்
மணிபணிபொன் அணியணிந்த மைசேர் கண்ணாள்

அணியரவம் விளையாடும் அம்பலவன் நம்பெருமான்
அருகிருந்து சிவனழகை அனுப வித்தே
அருள்செய்யும் திருநெல்லை அம்பு யத்தாள்
அரவிந்தம் அனையாளை ஆர்த்த சான்றோர்

பணியவரம் தந்துதவும் பதுமமுகம் அனையவளைப்
பவளவெற்பில் படர்ந்தகொடிப் பச்சை யாளைப்
பால்வண்ண வெண்ணீறு படர்ந்த மேனிப்
பண்ணவனாம் கொற்றவாள் ஈசன் தம்மைப்

பிணியகற்றும் பிஞ்ஞகனை மணங்கொண்ட பெரியவளைப்
பெற்றதாய் வன்னிவனம் பேணு வாளைப்
பேரழகு படைத்தவளைப் பேணி வாழ்வார்
பெருமையினை நாம் என்றும் போற்றலாமே !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

நம்முடைய திருமடத்தில் பாரம்பரியப் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் காப்பதற்காக நம்முடைய குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் அரும்பாடு பட்டார்கள். ஆனாலும் திருமுறை, தவில், நாதஸ்வரம், கற்சிற்பம், பஞ்சலோகச் சிற்பம், மரச்சிற்பம், வேத ஆகமப்பள்ளி அனைத்தையும் மிகுந்த பொருட்செலவிலும், சிரமங்களுக்கு இடையேயும் நடத்தி வந்தார்கள். காலத்தின் கட்டாயத்தால் மேலே சொன்ன திருக்கோவில்களைச் சார்ந்த பாரம்பரியக் கலைகளைக் கற்பதற்கு மாணவர்கள் வரவில்லை. வந்தவர்களும்சிரத்தையோடு கற்கவில்லை; ஒழுக்க நெறியில் பிழைகள் செய்தார்கள். எனவே இந்தக் கலைகளை மிக்க வேதனையோடும், வருத்தத்தோடும் நிறுத்த வேண்டியதாயிற்று. இப்பொழுதும் நல்ல ஆசிரியர்களும், மாணவர்களும் கற்பதற்கும் கற்பிப்பதற்கும் வருவார்களே ஆனால் மீண்டும் கலை வகுப்புகளைத் தொடங்க எந்த நேரத்திலும் தயாராக உள்ளோம்.

இந்தக் கலைகளைப் போலவே நம் பகுதியின் பாரம்பரியச் சொத்தாகிய தாலாட்டுஇசை, ஒப்பாரிப் பாடல்கள், லாவணிப் பாடல்கள் அனைத்தும் ஏறக்குறைய மறைந்த சூழ்நிலையே உள்ளன. இதனையாவது நாம் முயற்சி செய்து திரும்பவும் வலுவும், வளமும் கொடுத்து வளர்க்க முயற்சி செய்யலாம் என்று கருதுகிறோம். இந்தக் கருத்தை நம்முடைய அருங்காட்சியகத்தின் நெருங்கிய தொடர்புடைய நல்மனிதர் உயர்திரு. கண்ணப்பன் (**Assistant General Manager, Nabard**) அவர்கள் மிகவும் வற்புறுத்திச் செயல்பட வைத்துள்ளார்கள். எனவே நம் திருமடத்தில் முதற் கட்டமாக 27.04.2017 அன்று தாலாட்டுப் பாடல்கள் பாடத் தெரிந்த பெண்மணிகளை அழைத்து இசையோடு தாலாட்டுப் பாடல்களைப் பதிவு செய்ய உள்ளோம்.

எழுதா இலக்கியமான தாலாட்டு, ஒப்பாரி போன்றவைகள் உணர்வின் வெளிப்பாடாக நல்ல சொற் கூட்டு ஓசைநயம், பொருள் நயம் அனைத்தும் இணையப் பெற்ற அற்புதமான வாய்மொழி இலக்கியம். படிக்காத மேதைகளான நம் பெண்மணிகள் குழந்தைகளைத் தாலாட்டுவதும், அதன் வழியாக நம் பகுதியின் பண்புகளை, பெருமைகளைச் சொல்லாலே வண்ணமயமாக தீட்டுகின்ற கலை. எந்தத் தாலாட்டிலும், ஒப்பாரியிலும் குடும்ப வரலாற்றையும் முன்னோர் செய்த தருமங்களையும்,

பெருமைகளையும் நயத்தோடு வெளிப்படுத்தும். குழந்தைப் பருவத்தைப் பண்பு வழி நடத்தும் என்பதில் ஐயமில்லை. இப்பாடல்களை இன்றைக்கு நம் பகுதியிலே உணர்வோடும். இசையோடும் பாடத் தெரிந்தவர்கள் நூற்றுக்கு ஒருவர் அல்லது இருவர் மட்டுமே தேறுவார்கள்.

எனவே இப்பாரம்பரியச் சொத்தைப் பதிவு செய்து அழியாமல் காப்பதும், வளர்ப்பதும் நம்முடைய கடமையாகும். விஞ்ஞான ரீதியாக கருவில் வளர்கின்ற காலத்திலேயே குழந்தைகள் கற்கத் தொடங்கி விடுகின்றன. சிறு குழந்தையாகத் தொட்டிலிலே தாலாட்டுக் கேட்ட குழந்தை அம்மாவின் உணர்வையும், உள்ளத்தையும் புரிந்து கொள்கின்ற வல்லமை உடையதாகும்.எனவே சொல்லப் படுகின்ற நல்ல செய்திகள் செவி வழி சென்று குழந்தைச் செல்வத்தைப் பண்பு வழி நடத்தும் என்பதில் ஐயமில்லை. இப்பொழுதுள்ள தாய்மார்கள் குழந்தைகளுக்குப் பாடலோ, இசையோ கற்பிக்க இயலாமல் வாயில் ரப்பரை வைத்தோ, கையில் பந்தைக் கொடுத்தோ சமாதானம் செய்து அவர்களுடைய அறிவு வளர்ச்சியையும், பண்பு வளர்ச்சியையும் தடை செய்கிறார்கள்.இதனை நம்முடைய இளைய சமுதாயம் புரிந்து கொண்டு நம்முடைய குழந்தைகளுக்கு நம்முடைய குழந்தைகளுக்கு நல்லவற்றை இசை வாயிலாகக் கற்பிக்க வேண்டிய கட்டாயம் உள்ளது.

இதனை உணர்ந்த இளம் பெண்கள் தாலாட்டையும் இசையுடன் குறுந்தகடு வாயிலாக **(Audio / Video CD)** இருந்தால் நாங்கள் கற்றுக் கொள்கிறோம் என்று ஆர்வமாகக் கேட்கிறார்கள். நம் திருமடம் இந்தச் சீரிய முயற்சியில் தங்களை ஈடுபடுத்திக்கொள்ளத் தயாராக உள்ளது. முதற்கட்டமாகத் தெரிந்தவர்களைக் கொண்டு முயற்சி செய்து நல்ல தாலாட்டுப் பாடல்களை இசையோடு பதிவு செய்து இளைய தலைமுறைக்கு வழிகாட்ட விரும்புகிறோம். தொடர்ந்து முயன்று முழுமை பெறச் செய்வோம். அதனுடன் ஒரு முழுமையான தாலாட்டு இலக்கியத்தினையும் உருவாக்கவும் விரும்புகின்றோம். வரும் தலைமுறையினருக்குப் பண்பையும், உணர்வையும் தரமுயலுவோமாக.

இந்த முயற்சிக்கு ஆர்முள்ள அன்பர்கள் ஆதரவும், ஒத்துழைப்பும் தர வேண்டியது.

ஆசீர்வாதங்கள்!

ஸ்ரீ சற்குருநாதன் துணை

## பட்டினத்தார் பைந்தமிழ் - 6

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

இல்லறம், துறலறம் என்ற இருவேறு கோட்பாட்டின் உள்ளடக்கமானது மனித வாழ்வு மனையற வாழ்வின் பயனாய் மக்களொடு மகிழ்ந்து அறங்கள் ஆற்றித் துறவறங்கொள்வ தென்பது தமிழ்ப்பண்பு; இப்பண்பைப் பட்டினத்தார் செய்து காட்டினார், இவரைப் போலவே இவருக்கு முன்னர் வடநாட்டில் புத்தர் வாழ்ந்து துறந்தார்.

இல்லறம் கொள்ளாமலே துறவறங்கொள்வது பெரும் பான்மையன்று என்பதால்தான் வள்ளுவரும் அறநெறிப் படியே இல்வாழ்வை ஒருவன் நடத்தினால் அவன் வேறு நெறியில் போய்ப் பெற வேண்டுவது ஒன்றும் இல்லை என்றார்.

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன்?

மேலும் தவசியரின் நோன்பைவிட இல்லற வாழ்வு வலிமையுடையது என்றும் கூறுவதால் துறவறத்தினும் உயர்ந்த இல்லறப் பாங்கில் பட்டினத்தார் இக்கோயில் நான்மணி மாலையில் அகப்பொருள் படச் சிலபாடல்களைப் பாடியுள்ளார்.

இல்லறத்திலிருந்து துறவு மேற்கொண்ட பட்டினத்தார் இல்லறம் பற்றிப் பாடியது ஏனெனில் அஃதும் பிறன்பழிப்ப தில்லாயின் நன்று (49) எனக் கூறியபடி ஆண்டவனே இல்லறமாக வாழ்ந்ததைச் சுட்டி வையத்துள் வாழ்வாங்கு மனிதன் வாழக் கூறும் அறிவுரையாகச்சில பாடல்களை அகப்பொருள் நிலையில் பாடிக் காட்டினார்.

இல்லறத்தில் ஒருவரை ஒருவர் புரிதல் உணர்வே அடிப்படையானது. இந்தப் புரிதல் உணர்வை இலக்கியப்படுத்தும் போது சில புனைவுகள், உவமை, உருவகங்கள், தேவைப்படும் நிலையில் கதாபாத்திரப் பங்களிப்பின் வழி அவைகள் உணரப்படும், இந்த வகையில் உலகியல் சார்ந்த ஆண்பெண் வாழ்வைப் போல, ஆன்மீக உலகில் ஆன்மாவும் ஆண்டவனும் ஒன்று படுதலை நாயக

நாயகி பாவனையாகக் கருதுவர். இதனைத் தெய்வீகக் காதல் என்பர். இத்தெய்வீகக் காதல் கொண்டு பட்டினத்தார் தில்லை நடராசரை அனுபவிக்கின்றார்.

சிதம்பரமாம் தில்லையின் தேர்பவனி கண்கொள்ளாக் காட்சியாகும். சேந்தனார் என்னும் அடியார், தில்லைத் திருத்தேர் பவனியின் சிறப்பைப் பல்லாண்டு என்ற பதிகத்தில் பதிவு செய்து பாடியுள்ளார்.

சிதம்பரநாதன் தேரில் பவனி வருவதைப் பார்த்த ஒருத்தி அவன்மீது காதல் கொள்வதால் உடல்மெலிந்து கைவளையல் சோர்ந்து கீழே விழுகின்றன என்கிறார் பட்டினத்தார். ஐயன்தேர் சேயே வருமளவில் தையல் வளைகொடுத்தல் சாலும்(17) என்கிறார். இது ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து என மணிவாசகர் கூறியது போன்ற பக்குவப்பட்ட தன்மையைப் பட்டினத்தார் உணர்த்தியதற்கான ஒப்புமை போன்றதாகும்.

இதனால் பக்குவப்பட்ட ஆன்மாதான் ஆண்டவனைப் பற்ற முடியும் எனக்குறிப்பாகக் கூறியவர் அடுத்த பாடலில், ஆன்மாவுக்கு ஆண்டவனது அருட் சக்தி அருளவில்லையானால் ஆண்டவனை அனுபவிக்க முடியாது என்பதால் அடைய வேண்டும் என்ற அற்ப ஆசையை ஆன்மா விட்டுவிட வேண்டும் என்கிறார்.

........ தில்லை அம்பலக்
கூத்தற்கு அவிர்சடைமேல்
கொங்கிடத் தார்மலர்க் கொன்றை என்றாய்
எங்கை நீயும் ஒரு
பங்கிடத் தான்வல்லை யேல் இல்லையேல்
உன்பசப் பொழியே! (18)

தில்லைக் கூத்தன் இடப்பாகத்தில் ஏற்கனவே ஒருத்தி உள்ளாள், (ஆன்மாவாகிய) பெண்ணே! அவள் உன்னைத் தங்கையாகக் கருதினால் நீ விரும்பும் கொன்றை மாலையைப் பெறலாம் எனத் தோழி கூறுவதாகப் பாடப்பட்டுள்ளது.

19ஆம் பாடலில் தலைவனாகிய சிவபெருமான் என்னைக் கண்டுகொள்ளாமல் இருப்பதால் அவனைப் பற்றி நினைப்புகள் எனக்குள்ளேயே இருப்பதால் ஒருத்தி வருந்துவதாகப் பாடப்பட்டுள்ளது. இது ஒருதலைக் காதல் என்ற அகப் பொருள் நிலையில் தலைவி நினைப்பதாகப் பட்டினத்தார் பாடுவது புதுமையாகும். ஆடவன்தான், சொல்லிப் புலம்புவதாகப் பாடுவது இலக்கணமாக இருந்தாலும் ஈண்டுப் பெண் நினைப்பதாக மாற்றிப்பாடுவது இலக்கணமீறலாக இருந்தாலும் தெய்வீகக் காதலின் பிரேமையை உணர முடிகிறது.

இந்தத் தெய்வீகப் பிரேமையால்தான் தேரில் பவனி வரும் ஈசனைக் காணத் துடிக்கும் அவளைத் தாய்மார்கள் கட்டுப்படுத்தினாலும் அவள், ஓடிப்போய் தில்லை வனநாதனைத் தொழுகின்றானாம்.

பெற்றோர் பிடிக்கப் பிழைத்துச் செவிலியர்கள் சுற்றோட ஓடித் தொழாநிற்கும் (21) என்பது பட்டினத்தார் வாக்கு.

ஆன்மாவைப் பெண்ணாவும் ஆண்டவனை நாயகனாகவும் பாடிய பட்டினத்தார் சற்று மாற்றி ஆண்டவனை நாயகியாகப் பாவித்து ஆன்மாவாகிய தலைவன் (நாயகன்) அனுபவிக்கும் திறத்தை 23 ஆம் பாடலில் பாடியுள்ளார். தில்லைச் சிற்றம் பலமாகிய சோலையில் மயிலின் சாயலும் குயிலின் மொழியும் பூங்கொடி போன்ற இடையும் ஓவியத்தால் எழுதமுடியாத அழகுத் தோற்றமும் உடைய ஒருத்தி என் நெஞ்சம் கவர்ந்தவளாய் நிற்கின்றாள் என்கிறான் தலைவன்.

இக்கருத்து ஒரு தத்துவமயமானது. அன்புடையவர்க்கு அன்பு செய்யப்படும் பொருள்மீது ஆராக் காதலால் அந்நினைவு விட்டகலாது என்பது கருத்து. இதன் அடிப்படையில் பட்டினத்தாராகிய தலைவர் தில்லையம்பல நாயகியின் நினைப்பை எப்போதும் உடையவராகவே உள்ளக் குறிப்பைப் பாடல் வழிப் புலப்படுத்தினார் என்பது கருத்து; வடிவு எழுதும் அருமையார் எனது இதயம் முழுதும் ஆள்வரே (23) என்றதால் பட்டினத்தாரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவரே தில்லை நடராசர்தான் எனத் தெரிகிறது. இத்தகு நடராசனை நெஞ்சே! நீ ஆடும் அம்பலக் கூத்தனை உயிர் உள்ள போதே வணங்கு என நெஞ்சுக்கு அறிவுறுத்தும் வகையில் அருள் நடம் ஆடும் பிரானை அடைந்துருகிப் பணியாய் எனப்(26) பாடுகிறார்.

இப்படியாகத் தொடர்ந்து அகப்பொருள் நிலையில் பாடிப்பரவி அம்பலவாணரைத் தொழும் பட்டினத்தார் இறைவனை அடையும் வகையில் தூதுவிடும் செயலை மேற்கொள்வதாக 27 ஆம் பாடலைப் பாடினார். இணையான இரண்டு உள்ளத்தையும் இசைவிக்கச் செய்வது தூது. இந்தச் சொல்லே ஓர் அதிசயமான பொருட் செறிவுடையது.

தூ - நெடில் எழுத்து. து - குறில் எழுத்து. ஒரு வர்க்கொருவர் விலகியிருப்பதை நெடிலாகிய எழுத்து குறித்தாலும் சமாதானம் செய்து விட்டதும் இணைந்து நெருங்கும் தன்மையைக் குறிப்பதாக இருப்பது து என்று குறில் எழுத்து. இதுபோன்ற தொரு சொல் இல்லவே இல்லை எனலாம். பகை உணர்வை மாற்றிப் பண்போடு வாழ உதவுவது தூது. அந்த உணர்வின் வழி தலைவி, தோழியிடம் கூறி அவனை வருமாறு செய்ய முயற்சிப் பதைப் பட்டினத்தார் 27 ஆம் பாடலில் பாடியுள்ளார்.

வண்டுகள் மலர்கிண்டித் தென்னா எனமுரல்
பொழில் சூழ் தில்லையுள்
அரனார் திருமுடி அணிதாமம்
தன்னால் அல்லது தீராது என்னிடர்

என்ற செய்தியைக் கூறும்படித் தலைவி சொல்லியனுப்புகிறாள்.

இங்ஙனமாகக் கூத்தப்பிரான் பக்குவமுடைய ஆன்மாவுக்கே அருள் புரிவான் என்ற கருத்தை வலியுறுத்த 29 ஆம் பாடலில் தலைவி விரும்பும் மாலை பற்றிய குறிப்பைப் பட்டினத்தார் கூறும்போது, நயமான கருத்தொன்றைப் பதிவு செய்கிறார்.

விரும்பியவர்க்கெல்லாம் தில்லைக் கூத்தன் தன் கொன்றைமாலையைத்தர மாட்டான், ஏனெனில் அது பொதுவாக வழங்கப்படும் எளிமையான பொருள் இல்லை, பண்டமாற்றாக ஒன்றைத் தருபவருக்கு அதனைத் தருவான் என்கிறார். அதாவது யார் ஒருவர் தனக்கு சிவனுக்குப் பித்திப்பூ தருகிறாரோ அவருக்குத் தன்கொன்றை மாலையைத் தந்து விடுவான். இதுதான் கொண்டும் கொடுத்தும் அருள் செய்கின்ற தன்மையாகும்: தந்தது உன்தன்னைக் கொண்டது என் தன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர் என

மணிவாசகர் கூறியதுபோன்று பட்டினத்தார் ஈண்டுக் கோயில் நான்மணி மாலையில்,

நினையார் மெலியார் நிறையழியார் வாளாப் புனைவார்க்குக் கொன்றை பொதுவோ?

அனைவீரும்

மெச்சியே காண வியன்தில்லை யான் அருள் என்?

பிச்சியே நாளை பெறும்.

என்கிறார்.

இறைவனை நினையார், நினைந்து உருகார். நினைத்து உள்ளம் அன்பால் தளரார் போன்றவர்கள் சிவன் சூடியுள்ள கொன்றை மாலையின் அருமை அறியாதவர்கள். அத்தகையோர்கள் கேட்ட மாத்திரத்தில் தரத்தகுந்த சாதாரணமான மாலையா? அது! அவரவர் நிலைக் கேற்ப அருள் செய்யும் ஈசன் தன் மீது பித்துக் கொண்டவர்க்கே அருள்மாலையைத் தருவானே யன்றிப் பிறர்க்குத்தாரான்.

இப்பாடலில் பிச்சியே நாளை பெறும் என்ற தொடரானது பித்திப்பூவைப் பெறும் எனப் பொருள் கொண்டாலும் ஆன்மாவானது பித்துக்கொண்டு காதல் செய்தாலன்றி அருள் மாலையைப் பெறமுடியாது என்பது கருத்து. எனவே சம்பந்தர் கூறுவது போல, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குவதைத்தந்தால் இறைவன் நன்னெறிக்கண் நிறுத்துவான். ஆக ஆன்மாவின் அன்புப் பிரசாதமே ஆண்டவனுக்கு உவப்பு என்பது கருத்து.

இப்படியாகப் பட்டினத்தார் கோயில் நான்மணி மாலையில் பல பாடல்களைத் தமிழ் இலக்கண முறைப்படி அகப் பொருள் சுவையில் தலைவன் தலைவி என்ற குறியீட்டை நாயக நாயகிபாவனையில் பாடித்தில்லைக் கூத்தனைத் தொழுது வணங்குகிறார்.

இங்ஙனம் பட்டினத்தார் தம்மைத் தலைவியாகப் பாவித்துக்கொண்டு பாடும் முறையை வேற்று வாயாலே பாடுதல் என்ற தமிழின் அலங்காரமாகக் கூறுவர். அதாவது தான் தானாக இருந்து பாடாமல் தன்னைப் பெண்ணாக மாற்றிக் கொண்டு பாடுவது: ஒரு

பொருளுக்கு மாற்று கற்பிக்கும் போது அதன் அனுபவரசனை கூடும். இனிப்புப் பொருளான வெல்லத்தை இனிப்புப் பண்டமாக்கி உண்ணும் போது அதன் சுவையின் தன்மை போன்றதே வேற்று வாயாலே அனுபவித்தலாகும். அடுத்து தாமே பாடிப்பரவும் பட்டினத்தார் பாடற் கருத்தை இனி காண்போமாக!

*(தொடரும்)...*

## திருக்குறள் தெளிவுரை

**(ம. கார்மேகம்)**

**பொறை உடைமை - பொறுமைக் குணம் உடைமை**

**1. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.**

அகழ்வாரை - தோண்டுபவரை ; தாங்கும் - பொறுத்துக் கொள்ளும்; நிலம்போல - பூமியைப் போல ; தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் - தம்மை இகழ்ந்து அவமதிப்பவரைப் பொறுத்துக் கொள்ளுதல்; தலை - முதன்மையானதாகும்.

தன்னைத் தோண்டுபவரைப் பொறுத்துக் கொள்ளும் பூமியைப் போலத் தம்மை இகழ்ந்து அவமதிப்பாரைப் பொறுத்துக் கொள்ளுதலே முதன்மையானதாகும்.

**2. பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.**

பொறுத்தல் - பொறுத்துக் கொள்ளுதல் ; இறப்பினை - பிறர் மிகையாக இகழ்ந்தவற்றை; என்றும் - என்றைக்கும்; அதனை மறத்தல் - பிறர் மிகையாக இகழ்ந்ததனை மறந்துவிடுதல் ; அதனினும் நன்று - பொறுமையைவிட நல்லதாகும்.

என்றைக்கும் பிறர் செய்த மிகையான இகழ்வினைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்; அதனை மறந்து விடுதல் பொறுமையை விட நல்லதாகும்.

**3. இன்மையுள் இன்மை விருந்துஒரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.**

இன்மையுள் இன்மை - வறுமையினும் வறுமை எனப்படுவது; விருந்து ஒரால் - விருந்தினரை விலக்குதல்; வன்மையுள் வன்மை -

மனவலிமையிலும் வலிமை எனப்படுவது: மடவார்ப்பொறை - அறியாமையால் தம்மை இகழ்ந்தாரைப் பொறுத்துக் கொள்ளுதல்.

வறுமையிலும் கொடிய வறுமை என்பது விருந்தினரை ஏற்காது விலக்குதல் ஆகும்; மனவலிமையிலும் வலிமையாவது அறியாமையில் தம்மை இகழ்ந்தவரைப் பொறுத்துக் கொள்ளுதல் ஆகும்.

**4. நிறை உடைமை நீங்காமை வேண்டின்**
**பொறைஉடைமை போற்றி ஒழுகப் படும்.**

நிறை உடைமை - நிறைந்த நற்பண்புகள் உடைமை ; நீங்காமை வேண்டின் - தன்னிடமிருந்து நீங்கக் கூடாது என விரும்பினால்; பொறை உடைமை போற்றி - பொறுமை காத்தல் என்னும் பண்பினைக் காத்து; ஒழுகப்படும் - ஒழுகுதல் அவனால் அமையும்.

நிறைந்த நற்பண்புகள் உடைமை தன்னிடமிருந்து நீங்கக் கூடாது என ஒருவன் விரும்பினால் பொறுமை காத்தல் என்னும் பண்பினைக் காத்து ஒழுகுதல் அவனால் அமையும்.

**5. ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.**

ஒறுத்தாரை - தமக்குத் தீங்கு செய்தவர்க்குத் துன்பம் தருபவரை ; ஒன்றாக வையாரே - ஒரு பொருட்டாகக் கருதிட மாட்டார்; வைப்பர்- பொருளாகக் கருதி வைப்பார்கள்; பொறுத்தாரை- பொறுத்துக் கொள்பவரை ; பொன்போல் பொதிந்து-பொன்னைப் காப்பது போல் காத்து.

தமக்குத் தீங்கு செய்தவர்க்குத் துன்பம் தருபவரை ஒரு பொருட்டாகப் கருத மாட்டார்கள் சான்றோர்; பொறுத்துக் கொள்பவரைப் பொன்னைக் காப்பது போல் பொதிந்து ஒருபொருளாகக் கருதிவைப்பார்கள்.

**6. ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றும் துணையும் புகழ்.**

ஒறுத்தார்க்கு - தமக்குத் தீங்கு செய்தவரைத் தண்டித்தவர்க்கு; ஒரு நாளை இன்பம் - அந்த ஒரு நாளில் மட்டுமே இன்பம் ; பொறுத்தார்க்கு - பொறுத்துக் கொண்டவர்க்கு; பொன்றும் துணையும் புகழ் - அழியும் காலம் வரையிலும் புகழ் உண்டாகும்.

தமக்குத் தீங்கு செய்தவரைத் தண்டித்தவர்க்கு அந்த ஒருநாளில் மட்டுமே இன்பம்; தீங்கினைப் பொறுத்துக் கொண்டோர்க்கு அவர் உயிர் நீங்கும் வரையிலும் புகழ் உண்டாகும்.

**7. திறன்அல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறன்அல்ல செய்யாமை நன்று.**

திறன்அல்ல - நன்மை அல்லாத தீங்கினை ; தற்பிறர் செய்யினும் - தனக்குப் பிறர் செய்தாலும்; நோநொந்து - அவர்செய்த தீங்கால் வந்த துன்பத்திற்கு வருந்தி; அறன்அல்ல - அறமல்லாத செயல்களை ; செய்யாமை நன்று - அவர்களுக்குச் செய்யாதிருத்தல் நன்று.

நன்மை அல்லாத தீங்கினைத் தனக்குப் பிறர் செய்தாலும் அவர் செய்த தீங்கால் வந்த துன்பத்திற்கு வருந்தி அவர்களுக்கு அறமல்லாத செயல்களைச் செய்யாதிருத்தலே நன்று.

**8. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியான் வென்று விடல்.**

மிகுதியான் - வலிமை மிகுதியால்; மிக்கவை செய்தாரை - செய்யக் கூடாத தீங்குகளைச் செய்தவர்களை ; தாம் - செய்யப்பட்டவர்கள், தம்தகுதியான் வென்று விடல் - தம்முடைய பொறுமைப் பண்பால் வென்றுவிடல் வேண்டும்.

வலிமை மிகுதியால் செய்யக் கூடாத தீங்குகள் செய்தவர்களைத் தம்முடைய பொறுமைப் பண்பால் வென்று விடவேண்டும்.

**9. துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.**

துறந்தாரின் - துறவுகொண்டவர்கள் போல ; தூய்மை உடையர் - தூய்மை நிறைந்தவர்கள்; இறந்தார்வாய் இன்னாச்சொல் -

நல்லநெறிகளை மீறியவர்கள் கூறும் இன்னாத சொற்கள் : நோற்கிற்பவர் - பொறுத்துக் கொள்பவர்கள்.

நல்ல நெறிகளை மீறியவர்கள் கூறும் இன்னாத சொற்களைப் பொறுத்துக் கொள்பவர்கள் துறவு கொண்டவர்களைப் போலத் தூய்மை நிறைந்தவர்கள் ஆவர்.

10. **உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்.**

உண்ணாது - உணவு உண்ணாமல்; நோற்பார் - பசியினைப் பொறுத்துக் கொள்பவர்கள் ; பெரியர் - பெரியவர் ஆவர்; பிறர் சொல்லும் இன்னாச்சொல் - பிறர்சொல்லும் இன்னாத சொற்களை ; நோற்பாரின் பின் - பொறுத்துக் கொள்பவரின் பின்.

உணவு உண்ணாமல் பசியினைப் பொறுத்துக் கொள்பவர்கள் பெரியோர் ஆவர்; அவர்களும் கூடப் பிறர்சொல்லும் இன்னாத சொற்களைப் பொறுத்துக் கொள்பவரின் பின்தான்.

*(தொடரும்)...*

# குற்றம் நீங்கத் திருவருள் வழிபாடு (பிரதோச வழிபாடு)

– தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி

வடசொல்லில் உள்ள வடஎழுத்தைத் தமிழ்ப்படுத்திக் கொள்ள ஆணையிட்ட தொல்காப்பிய விதிப்படிப் பிரதோஷம் என்ற சொல் பிரதோசம் ஆகும்.

பிரதம தோசம் - பிரதோசமானது. பிரதமர் பிரதமை என்ற சொற்கள், தமிழில் முதன்மை என்ற கருத்தில் வழக்கில் உள்ளன. இந்த முறைப்படிப் பிரதோசம் என்பது முதன்மையான குற்றம் எனப்படும். தோச(ஷ)ம் - குற்றம்.

இப்பொருளடிப்படையில் தலையாய முதன்மைக் குற்றம் எது எனில் ஒருவர் செய்த உதவியின் பயனைப் பெற்றதும் மறந்து விடுவதுதான். இதைத்தான் அய்யன் திருவள்ளுவர் நன்றி மறப்பது நன்றன்று (108) என்றும் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு (110) என்றும் கூறினார்.

இந்த உண்மைதான் செம்பில் களிம்புபோல் மனிதவாழ்வில் படிந்துள்ளதை உணர்த்திக் காட்டித் திருத்தும் விதமாக அமைந்த வாழ்வியலைப் புராணப் பாங்கில் நம் ஆன்மீகச் சான்றோர் பிரதோச வழிபாடாக வழிகாட்டினர்.

பிர என்ற வடசொல்லுக்குத் தெய்வீகம் என்று பொருள். நாம் உண்பது சாதம். அதுவே தெய்வத்திற்குப் படைத்து உண்டால் பிரசாதம். மக்கள் கூடுமிடம் சங்கம். ஆங்கே தெய்வீகம் பற்றிப் பேசினால் பிரசங்கம். இவ்வாறே மனிதரின் முதன்மையானதொரு (பிரதானமான) குற்றம் (தோச(ஷ)ம்) பிரதோச(ஷ)மானது.

இக்குற்றம் களைய வேண்டிக் கூறப்பட்ட புராணத்தின்படி பொதுவாக இதை உபசார வழக்காகத் தெய்வத்திற்கு ஏற்றிக் கூறி. சிவபெருமான் நஞ்சுண்டது அவரது மனைவி உமாதேவியாருக்குக் குற்றமாகப்பட்டது. முதலாகத் தேவாசுரர்களின் நன்றி மறந்த செயல்கள் கதையாய்ச் சித்திரிக்கப்படுகிறது.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அடிக்கடிப் போர் மூண்ட வண்ணம் இருந்ததால் அசுரர்களால் தங்கள் இனம் அழிந்துவிடுமோ என்ற அச்சம் தேவர்களை வாட்டிவதைத்தது. இதனால் முதுமை. மரணம் போன்ற துன்பங்கள் தம்மைத் தாக்காவாறிருக்க ஒரு வழிகாணத் தேவர்கள் பிரம்மாவை நாடினார். அவரோ திருமாலிடம் போக அவர் திருப்பாற்கடலைக் கடைந்தால் வரும் அமிர்தத்தை உண்டால் மரணமில்லாமல் வாழலாம் என்றார்.

திருப்பாற்கடலில் தாம் பள்ளி கொண்டிருப்பதால் தாமாகவே கடலைக் கடைய முனைந்தபோது மூவர்க்கும் முதல்வராகிய சிவனை மறந்த நிலையில் பாற்கடல் கடைய ஏற்பாடானது. மிர்து என்ற வடசொல்லுக்கு உறவு என்பது பொருள். அது பிறப்பாகிய தொடர்பைக் குறிக்கும். தேவர்களே யாயினும் பிறப்பிறப்புகளுக்கு உட்பட்டவரே யாதலால் சாவாமைக்குரிய வகையில் அமிர்தத்தை உண்ண ஆசைப்பட்டனர். அ-எதிர் மறைப் பொருள்தரும். பிறப்பை மாற்றுவது அமிர்து-அமிர்தம் என்றானது.

இந்நிலையில் பாற்கடலை எங்ஙனம் கடைவது என

நினைக்கையில் பகையான அசுரர்கட்கு அமிர்தம் உண்ணும் ஆசையை ஊட்டத்தேவரும் அசுரரும் சேர்ந்து கொண்டனர். நன்மைக்கு ஒன்றுபடாதவர்கள் தீமையில் ஒன்றுபட்டனர். அதாவது முரண்பட்ட தேவாசுரர்கள் தம் விருப்பத்தைச் சிவனிடம் கூறிச் சாகா வரம் பெறாதது பெருந்தீங்கானது என்பது கருத்து.

மந்திர மலையை மத்தாக்கிக் கொண்டு வாசுகியாம் பாம்பைக் கயிறாக்கிக் கடைய முற்படும்போது பாம்பின் தலைப்பக்கத்தில் அசுரரும் வால் பக்கத்தில் தேவர்களுமாக அணிவகுத்தனர். பிரம்மா முன்னிலை வகிக்க, திருமால் ஆமை வடிவாய் மந்திர மத்தைக் கடலடியில் சென்று தாங்கினார்.

வளர்பிறை தசமி திதி காலையில் பாற்கடல் கடையத் தொடங்கி இரவு முழுவதும் கடைந்தும் அமிர்தம் கிடைக்கவில்லை. மாறாக அடுத்தநாள் ஏகாதசியில் வாசுகி தன் வலிபொறுக்க முடியாமல் விடத்தைக் கக்கியது. கக்கிய விடத்தால் பிறைகுத்திய பால் திரிதல் போலப் பாற்கடல் திரிந்தது. இதனால் அக்கினிப் பிழம்பாய்ப் பாற்கடலில் புகைகிளம்பித் தேவலோகத்தை இருட்டாக்கியது. யாவரும் செய்வதறியாது திகைக்கக் கடல் கடைவதில் தடை ஏற்பட்டது.

ஆமை வடிவெடுத்த திருமால் மேலே வந்தார். எல்லோருமாகச் சேர்ந்து சிவனிடம் அடைக்கலம் வேண்டிட முடிவெடுத்தனர். இந்நிலையில் எழுந்த புகையால் திக்குத் தெரியாததால் கயிலையை வலம் வர முடியாமல் இடம்புறமாக (அப்ரதட்சணம்) ஓடினர். எங்கும் விடப்புகை தாக்கியதால் மீண்டும் வந்த பக்கமாகவே திரும்பவும் ஓடினர். ஓரிடத்திலும் நிற்க முடியாமல் இங்குமங்குமாய் அங்குமிங்குமாய் அதாவது பிரதட்சணமாகவும் அப்ரதட்சணமாகவும் வலப்புற இடப்புறமாய் ஓடியோடிக் களைத்தனர்.

இவ்வாறாகக் கயிலையில் நடந்ததை நினைவு கூறும் விதமாக ஆன்றோர் பிரதோச பாலத்தில் இடமாய்த் தொடங்கி அப்ரதட்சண சுற்று முறையைச் செய்யக் கோயிலில் வழி வகுத்தனர்.

மேற்படியான விடத்தின் துன்பம் படிப்படியே குறையத் தொடங்கியதும் தேவாசுரர்கள் முதலில் கணநாதர் தலைவராகிய நந்தியம் பெருமானின் உதவியை நாடிச் சிவபெருமானைக் கண்டு

முறையிட்டு மன்னிப்பு வேண்டி தம் மறதியைப் பொறுத்தருளப் பணிந்து வணங்கினர். கருணைக்கடலான சிவபெருமான் தாயினும் சாலப்பரிந்து தேவாசுரர் செயலை மறந்து மன்னித்து அந்த விடத்தைத் தம் பக்கம் இருந்த சுந்தரரை அனுப்பி எடுத்து வரச் செய்தார்.

சுந்தரர் அந்த ஆலகால விடத்தை நாவற்பழம் போல் திரட்டிக் கொணர அதைத் தம் திருவாயில் இட்டுக் கொண்டபோது கண்ட உமாதேவியார் விடம் உள்ளே சென்றால் கணவருக்கு ஆபத்து வாராவாயினும் எல்லாச் சீவராசிகளும் சிவன் சீவனாக உள்ளதால் சீவன்கள் துன்புறுமே என்பதாலும் உண்ட விடத்தைக் கக்குமாறு செய்தாலும் அதனால் புற உலகில் அனல் வீசி அழிந்துபடுமே என்பதாலும் தம் கரத்தினால் கணவரது கண்டத்தை மெல்ல அழுத்திட விடம் கண்டத்திலேயே நின்று விட்டது.

இதனால் தேவாசுரர் துன்பம் களையப்பட்டது. யாரொருவர் பிறருக்காகத் தன்னையே தியாகம் செய்ய முன்வருகிறாரோ அவரே உயர்ந்த மனிதராவர். விடம் தன்னைக் கொல்லாதென்பது சிவனுக்குத் தெரியுமாயினும் விடமானது கொல்லும் தன்மையுடையது எனத் தேவாசுரர் உணர்ந்து அதனைச் சிவன் உண்டு தம்மைக் காத்தார் என நினைத்த அவர்தம் நினைப்பின்படித் தன்னைத் தியாகம் செய்ய முன்வந்த சிவனால் உலகியலில் தியாகத்தின் இலக்கணம் உணர்த்தப்பட்டது என்பதுதான் இந்தப் பிரதோச(ஷ)த்தின் தத்துவமாகும்.

இந்தத் தியாகத்தின் தத்துவச் சிறப்பைச் செம்மொழித் தமிழ் ஏற்றுப் போற்றியதால்தான் புறநானூற்றில் ஔவையார் அதியமானை நீலமணிமிடற்று ஒருவன்போல் மன்னுக பெரும (91) என அடையாம்காட்டி வாழ்த்தினார். உண்டாரை நீண்டநாள் வாழ வைக்கும் இயல்பறிந்தும் மன்னன் அந்த அரிய நெல்லிக்கனியை ஔவைக்குத் தந்த செயலானது சிவன் நஞ்சை உண்டு பிறரை வாழவைத்த தியாகத்திற்குச் சமமானதாயிற்று. இத்தியாகம் பரவலாகத் தமிழிலக்கியப் பரப்பில் பேசப்பட்ட இன்றியமையாதலால்தான் கூத்தராற்றுப்படை என்னும் பத்துப் பாட்டுள் (மலைபடு கடாத்துள்) ளும் சிவன் காரியுண்டிக் கடவுள் (83) என்பதாகவே அடையாளப்படுத்தப்படுகிறார். காரி-நஞ்சு.

நன்னன் என்னும் மன்னனைக் காணச் செல்லும் கூத்தர்கள் அவனது நவிர மலையில் ஏறிச் செல்கையில் சிவனது கோயில் இருந்ததைக் கண்டு தொழுது செல்கின்றனராம் என்கிறார் பெருங்கௌசிகனார் என்னும் புலவர்.

இப்படியாகச் சிவபெருமானைத் தியாகச் சீலராக அடையாளங்காட்டிய நிலையில் தடைப்பட்ட பாற்கடல் கடைதலானது சிவனது அருளால் மீண்டும் கடைய ஆணைபிறக்கத் தேவாசுரர்கள் கடைந்தனர். துவாதசியன்று அமிர்தம் தோன்றியது.

தோன்றிய அமிர்தத்தைக் கண்டதும் அறிவு மயங்கிச் சிவனை மறந்த நிலையில் ஆடிப்பாடிக் குதூகலித்தனர். 13ஆம் நாளாகிய திரயோதசி வரை மீண்டும் செய்வதறியாது திகைத்தனர். தோன்றிய அமிர்தம் சிவனால் கிட்டியது என்பதால் முதலில் சிவனை வணங்கித் தம் நன்றிப் புலப்பாட்டைக் காட்டவேண்டி அதனைச் சிவனுக்கு உரிமைப்படுத்தாமல் (அர்ப்பிதம் செய்யாமல்) நன்றி கொன்று ஆடிப்பாடியதால் தேவாசுரரின் அறியாமையே உலகெங்கும் இருள் மயமாவதற்குக் காரணமானது.

இந்தத் தீமையை நினைவூட்டிய நந்தியம்பெருமானால் தெளிவடைந்த தேவாசுரர்கள் மீண்டும் சிவனையே அடைக்கலம் அடைந்து தாழ்ந்து பணிந்தனர். உலகமே இருளடைந்ததை ஒளிமயமாக்க வேண்டி உடனுறை உமையவளும் வேண்டச் சிவபெருமான் அனைவரும் காணும்படி வளர்பிறை திரயோதசியாம் நாளின் மாலை 4.30 மணி முதல் 6.00 மணிவரை நந்தியம் தேவரின் கொம்புகளுக்கிடையே ஒளிமயமான நடனத்தை ஆடிக்காட்டினார். அந்த நாள் சனிக்கிழமை என்பதால் சனியொடு சனிபோச்சு என்ற உலகியல் வார்த்தையின்படிச் சனிக்கிழமையில் அமையும் பிரதோச(ஷ)ம் மகாப்பிரதோசம் எனப்பட்டது. வளர்பிறையில் நடந்த இப்பிரதோச நிகழ்வு மக்களின் வழிபாட்டு விருப்பத்தால் தேய்பிறையின் போதும் கடைப்பிடிக்கப்பட்டது. இது வளர்பிறையில் ஆவணி மாதத்தில் கொண்டாடும் விநாயகர் சதுர்த்தியைத் தேய்பிறையிலும் சங்கடகர சதுர்த்தியாகக் கடைபிடிக்கும் வழக்கத்தோடு ஒப்புமை உடையதாகும்.

இந்தப் பிரதோச நாளில் சிவன் நந்தியம்பெருமான் கொம்புகளுக்கிடையில் நடனமாடிக்காட்டியதிலும் ஒரு தத்துவம் உள்ளது. அண்ட வெளியில் நடனமாடாமல் சிறிய இடைவெளியான நந்தியின் கொம்புகளுக்கிடையில் நடனமாடுவது ஏன்எனில் பொதுவாக மாட்டின் கொம்புகள் இரண்டும் தோன்றும்போது ஒரு நேரத்தில் ஒரே அளவில் தோன்றி வளரும். இக்குறிப்பு வாழ்வின் இன்ப துன்பத்தைச் சமமாகக் கருத அறிவுறுத்தும் நடவடிக்கையாகும்.

திருப்பாற்கடலில் விடமும் அமிர்தமும் மாறிமாறி வந்தபோது விடம் கண்ட துன்பத்தால் துவண்டும் அமிர்தம் கண்ட இன்பத்தால் தலை தடுமாற்றமாக மகிழந்ததுமான செயல்கள் புராணமானாலும் உலகியலை உணர்த்திக் காட்டும் ஒளிமயமான வாழ்க்கைத் தத்துவம் என்பதே உண்மை. இந்த உண்மை அந்தக் காலத்துக்கு மட்டுமின்றி எந்தக் காலத்திற்குமான பிரதோச மகிமையாகும்.

மேலும் சிவனைப்போல நந்தியும் தியாகத்தை உணர்த்துவதாகும். காளையின் நிலையில் உள்ள நந்தி அம்சமான காளை வைக்கோலைத் தின்று நெல்லைப் பிறர்க்களிக்கும் பண்புடையதாம் என்பதால் தியாகத்திருவிழாவாகவே பிரதோசம் நடைபெறுகிறது எனலாம்.

## இப்பிரதோசத்தில் பிரதானமாகிய நந்தியைப் பற்றி அறிதலும் புண்ணியமாகும்

சிலாத முனிவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த தவசிரேட்டர் சித்ரவதியார் என்ற கற்பரசியை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். புத்திரப்பேறு இல்லாமையால் மனம் வருந்தினார். தம்பதியர் இருவரும் விரதம் இருந்து சிவபெருமானை வேண்டினர்.

விரதத்தின் பலனால், சிவபெருமான் தோற்றம் தந்து உனக்கு வயதாகி விட்டதால் மனைவி வழிப் புத்திரப்பேறு இல்லை என்றும் அதனால் மனம் உடையாமல் யாகம் ஒன்று செய் என்றும், அப்போது பூமியின் வழி புதல்வன் கிடைப்பான் என்றும் அவனுக்கு ஆயுள் பதினாறாக இருக்கும் என்றும் வரமளித்தார்.

அவ்வாறே யாகம் நடத்த நிலத்தைச் செப்பனிட்டபோது

புதையலாகக் கிடைத்த மாணிக்கப் பெட்டியில் ஆண்குழந்தை ஒன்றிருப்பது கண்டு, மகனாக மகிழ்ந்து வளர்த்து வந்தார் சிலாத முனிவர்.

குழந்தை ஜெனித்த காலத்தில் பிரம்மலோகம் உள்ளிட்ட தேவலோகத்தில் சகலர்க்கும் ஆனந்தம் வளர்ந்ததால் நந்தீசன் எனப் பெயரிடுமாறு பரமன் அசரீரியாகச் சொல்ல அப்பெயர் குழந்தைக்கு இடப்பட்டது.

தம் ஏழாம் வயதில் பெற்றோரை இழந்த குழந்தை, தமக்குப் பதினாறு வயது எனத் தாய் தந்தையரால் முன்னரே கேள்விப்பட்ட நிலையில் அடுத்தடுத்து மூன்றுமுறை கடுந்தவம் புரிந்து சிவனிடம் சில வரங்களைப் பெற்று சிரஞ்சீவியாக வாழும்பேறு பெற்றது.

பாலகன் நந்தீசன் முதல் முறை செய்த தவத்தால் சிவனிடம் எப்போதும் நீங்கா அன்பிருக்க வேண்டும் என வேண்டிக் கொண்டார். இரண்டாம் முறையில் சிவனை, சிவஅடியாரை, சிவச் சின்னங்களை நிந்தை செய்பவர்களைத் தண்டிக்கும் ஆணை பெற்றார். மூன்றாம் முறையில் சிவனைப்போல் நித்திய சிவசொரூபப்பேற்றால் சிவகணத் தலைவராகவும் சிவாலயங்கள்தோறும் பலி பீடத்தருகில் அதிகாரியாகவும் இருக்கும் திருவருளைப் பெற்றார்.

இவற்றுடன் சிவபெருமானின் திருக்கரத் தீட்சை பெற்றதோடு சிவனைத் தாங்கும் அழியாத் தேகமும் பெற்றார். இப்படியாகத் திருநந்தித்தேவர் என்ற அபிஷேகப் பெயரும், அதிகார நந்தி என்ற அதிகாரப் பெயரும் பெற்றார். எனவே நந்தியை வணங்குவதன் மூலம் சிவனருள் கிட்டும் என்பது பிதோச காலப் பலனாகும்.

*(நன்றி - கோவை சமயத்தமிழ்)*



# வள்ளலார் கண்ட அருட்பெருஞ்சோதி மகாமந்திரம்

*-புலவர் ஆறு. மெய்யாண்டவர்*

ஊக்கம் உள்ள மனிதன் ஒளி வடிவினர் ஆன கடவுளை உணர்வது எளிது. தன்னை அறிந்து உணர்ந்து அருட்பெருஞ் சோதி மந்திரத்தை உச்சரித்துப் பழகினால் நாம் பெறும் இன்பம் பேரின்பமாக மலரும். இப்பேரின்ப உணர்வை எய்தும் வழிமுறைகளைப் பின்வருமாறு ஆராய்வோம்.

பேரொளிப்பிழம்பாய் விளங்கும் கடவுள் அருள் சுரந்து ஆன்மாவிற்குப் பேரின்பம் தருகிறார்.

இவ்வுலகில் நாம் காணும் பொருள்களாக நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களும் அமைந்துள்ளன. பூதம் என்றால் நெருப்பை உள்ளடக்கியது எனப் பொருள் தரும். நெருப்பு என்ற ஒளி, நிலம், நீர், காற்று, ஆகாயம் எனும் நான்கொடும் இணைந்து ஐந்தாவதாய் நெருப்பும் அமைந்து விடுகிறது. இதையே ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் ஜோதி என மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்து அருளினார். இதையே வள்ளலார் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் என வெளிப்படுத்தினார். கடவுள் முழுமையான பேரொளி, அப்பேரொளியின் அருளையே அருட் சக்தி என்று பெரியோர் அழைப்பர். இந்த அருளை வள்ளலார் வெளியாகக் காட்டுகின்றார். ஒளியாய் உள்ள கடவுள், வெளியைத் தன் இருப்பிடமாய்க் கொண்டுள்ளார். எனவே உருவாகிய வெளியும் அருளாகிய தன்மையும் பிரிக்க முடியாதவை, ஆதலால் சக்தியை அருள் ஆகவும் சிவத்தை ஒளியாகவும் ஆன்றோர் குறிப்பிடுகின்றனர்.

அருளாக இருப்பதும் ஒளியே, ஒளியாய் இருப்பதும் அருளே, எனவே அருள் எனும் பெருந்தயவுதான் இறைவனின் இயற்கை விளக்கமாக இருக்கின்றது. இயற்கையின் வடிவமாய் இருப்பது ஒளி; இயற்கையின் விளக்கமாய் இருப்பது அருள்; இவ்விரண்டின் செயல்பாடுதான் இன்பம். இந்த இன்பத்தை நடனம் எனக் கூறலாம், இறைவன் இன்பமயமானவன்.

இறைவன் உண்மையை (உள்ளதை) உரு என்றும் அல்லது ஒளி என்றும். இறைவன் தன்மையை அருவரு அல்லது அருள் என்றும்

இறைவன் இயக்கத்தை இன்பம் என்றும் அழைக்கின்றோம். மேற் கூறியவற்றை இவ்வாறு வகைப் படுத்தலாம்

1. இயற்கை உண்மை (ஒளி)
2. இயற்கை விளக்கம் (அருள்)
3. இயற்கை இன்பம் (நடனம்)

இறைவனின் இயக்க வடிவமே எல்லா உயிர்கட்கும் சலிப்படையாப் பேரின்பத்தை வழங்குகின்றது. இத்தகு ஆற்றலை வழங்கும் அருட்பெருஞ்சோதி மகாமந்திரத்தை ஆராய்ந்தால் அருட்பெருஞ்சோதி எனும் ஒரே வார்த்தையில் ஐந்து வகையான ஆறு உயிர் ஒலிகள் அடங்கி உள்ளன. பதின்மூன்று எழுத்துகளாக விரிகின்றது.

அருட்பெரு+ஞ்+சோதி அ+ர்+உ+ட்+ப்+எ+ர்+உ+ஞ்+ச்+ஓ+த்+இ

அ, உ, எ, உ, ஓ, இ - இவ்வாறு ஆறு உயிர் ஒலிகளைப் பிரித்தால் மொத்தம் பதினைந்து எழுத்துகளாக விரிந்து ஆறு உயிர் எழுத்துகளாகிய ஒலிகளைப் பெற்று மகாமந்திரச் சொற்களை ஆங்கிலத்தில் எழுதினாலும்

A + R + U + T + P + E + R + U + N + J + O + T + H + I ஐந்து உயிரொலிகளைப் பெற்று ஒலிக்கின்றன. (A, U, E, U, OI) என்பன அவ்வொலிகள் அடுத்து

தனி+ப்+பெருங்கருணை

த்+அ+ன்+இ+ப்+ப்+எ+ர்+உ+ங்+க்+அ+ர்+உ+ண்+ஐ

ஆக

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி தனிப் பெருங்கருணை அருட்பெருஞ்சோதி எனும் இம்மகாமந்திரத்தில் ஆறு வகையான பதின்மூன்று உயிர் ஒலிகள் அடங்கி உள்ளன. இத்தனை வகையான உயிர்ஒலிகள் உயிர்மெய் பிரித்து எழுதினாலும் கூட இருபத்து எட்டு எழுத்துகளில் இத்தனை வகையான உயிர் ஒலி அலைகள் அடங்கிய மந்திரங்கள் எதிலும் இல்லை என உறுதிபடக் கூறலாம்; ஐயம் ஏற்பட்டால் அவரவர் மந்திரங்களை ஒலித்துப் பார்த்து உண்மை அறியலாம். இந்த மகாமந்திரம் எல்லாச் சமயங்களும் உள்ளடக்கிய சமரச சுத்தசன் மார்க்க சத்திய மந்திரம். என உணர்ந்து ஓதி மகிழ்வோம்.

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி!

## மடாலய நிகழ்வுகள்

### கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி நாட்டு நலப்பணித்திட்ட முகாம்

18.03.2017 அன்று கோவிலூரில் உள்ள ஆண்டவர் உடற்பயிற்சி மற்றும் விளையாட்டுக் கல்லூரியின் நாட்டுநலப் பணித்திட்ட 5 நாட்கள் சிறப்பு முகாம் கல்லூரி முதல்வர் டாக்டர் ரவீந்திரன் தலைமையில் நடந்தது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் முகாமினைத் தொடக்கி வைத்து உரையாற்றினார். தமிழ்ப் பேராசிரியர். கார்மேகம் சிறப்புரை ஆற்றினார். நாட்டு நலப்பணித்திட்ட அலுவலர் பேரா. சாத்தாகுட்டி நன்றி கூறினார்.

நாட்டு நலப்பணித்திட்ட முகாமின் ஒரு பகுதியாகக் கோவிலூர் மடாலயம் காணல் அறக்கட்டளை சென்னை ப்ரண்ட்லைன் கண் மருத்துவமனையுடன் இணைந்து மாபெரும் இலவச கண் சிகிச்சை முகாம் நடைபெற்றது. எம்.ஜி.ஆர் பல்கலைப்கழகத்தின் வாழ்நாள் சாதனையாளர் விருது பெற்ற புகழ்பெற்ற கண் மருத்துவர் டாக்டர். கிருஷ்ணன் தலைமையில் கண் பரிசோதனை செய்யப் பெற்றது. நூற்றுக்கணக்கானோர் பங்கு பெற்ற முகாமில் கண் பரிசோதனை செய்து ஆலோசனை வழங்கப்பட்டு இலவசமாக மருந்துகளும் வழங்கப்பெற்றன. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் மருத்துவக் குழுவினருக்குப் பொன்னாடை அணிவித்து நினைவுப் பரிசுகளை வழங்கினார். நாட்டு நலப்பணித்திட்ட அலுவலர்கள் ஆசிரியர்கள் மாணவர்கள் முகாமுக்கான ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர். 25.03.2017 அன்று இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில் சிறுத் தொண்டர் பற்றி முனைவர் மு. பழநியப்பன் உரையாற்றினார்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### உக்கிரபாண்டியன் அவதாரம்

சோமசுந்தரப் பெருமானே சுந்தர பாண்டியராக அமைந்ததனாலே சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர் குலத்துள் சந்திர குலத்தில் வந்த பாண்டியர் வம்சமே மிகவும் சிறப்புற்று விளங்கியது. அச் சுந்தர பாண்டியரே பாண்டியர் குலக் குறையையும் நீக்கத்திருவுளம் கொண்டார். மகேந்திரஜாலம் செய்பவனைப் போலச் சிவபெருமான் முருகப் பெருமானைத் தடாதகைப் பிராட்டியாரிடத்தே தோன்றும்படிக்குத் திருவுள்ளங் கொண்டார். அம்மையாரும் கருப்பவதி ஆயினார். உலகப் பெண்டிற்கு ஏற்படுவது போலவே பிராட்டியாருக்கும் மாதம்தோறும் கருத்தறித்தற் கேற்றதான வேறுபாடுகள் தோன்றின. வேதியர்களும் முனிபுங்கவர்களும் வந்திருந்து ராஜ குலத்தாருக்குரிய விசேடங்களை மதுரையம்பதியிலே மங்களம் ததும்ப மாதந்தோறும் செய்து முடித்தனர்.

பாண்டியநாடு தான் செய்த தருமத்தின் பலனை அடையுமாறும், தூய தவத்தவரின் மனம்போல வானம்களங்கமின்றித் துலங்கவும், திங்கட்கிழமையும் திரு ஆதிரை நட்சத்திரமும் தாம் செய்த பிரார்த்தனையின் பயன் பெறுமாறும், குருவெனும் வியாழன் கேந்திரத்தில் ஒளியுடன் ஏறி விளக்கமுற்ற சுபமுகூர்த்தம் நிகழவும் சதுர்வேதங்கள் தாமே முழங்க, தேவர்கள் மலர் பொழிய இலட்சுமியும் சரசுவதியும் இறும்பூது எய்தவும் சுந்தரப் பெருமானும் சுந்தரப் பெருமாட்டியும் கொண்டருளிய திருக்கோலத்திற்கு ஏற்ப, இளஞ் சூரியனைப்போல் முருக்க கடவுள்போல, தடாதகைப் பிராட்டியாரிடத்தே திருக்குமாரன் ஒருவன் அவதரித்தான்.

அவதரித்த தன் புதல்வனைப் பிராட்டியார் எடுத்து உச்சிமோந்து தழுவி ஏந்தித் தம் கணவரது திருக்கரத்திலே கொடுத்து வாங்கினார்.

மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் ஆகிய தேவர்களும், ஏனையோர்களும் தமது மனைவி மார்களோடு சுந்தரபாண்டியரின்

திருமனையை அடைந்தனர். சேர, சோழரும் வடபகுதி வேந்தர்களும் குறு நில மன்னர்களும் சேனைகள் சூழ்ந்து பாண்டியரையும் பிராட்டியாரையும் தரிசனம் செய்து, துதித்து, திரு மகன் தோன்றியது குறித்து உவகை மொழிகள் பல பேசித் தத்தம் இடங்களுக்கு ஏகினர்.

முருகப் பெருமானே குழந்தையாக வந்துள்ளான், இக் குமாரனது ஆணை ஏழு உலகங்கள் அனைத்தையும் காக்கும், பாண்டி நாட்டார் செய்த பெருந் தவந்தான் திருக்குமாரன் தோன்றக் காரணம், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் தனித்தனி இயற்றிய பெருந்தவத்தின் பயனேயாம் இச்செல்வக் குமாரனின் திருத்தோற்றம், என்றெல்லாம் பலர் பலப்படி விளம்பினர்.

மதுரையம்பதி மங்கல விழாக் கொண்டாடிப் பெரு மகிழ்ச்சி காட்டியது. தான தருமச் செய்கைகள் பல ஊரெங்கும் மலிந்தன. பனிநீர், சந்தனம், கஸ்தூரி முதலியவற்றைத் தெளித்துத் தூய்மை செய்தனர் நகரமாந்தர். எங்கும் கோலாகலமும் குதூகலமும் தாண்டவம் ஆடின.

சுந்தர பாண்டியர் தனது அரும்புதல்வனுக்கு வேத முறைப்படி சாதகன்மம் முதலானவற்றை நடத்தினார். அத்திருக்குழந்தைக்கு உக்கிரவர்மன் என்று பெயர் சூட்டியருளினார். திருக்குழந்தை திவ்யமாக வளர்ந்து வந்தது. அதனது ஐந்தாவது வயதிலே வேதநூல் விதிப்படி, பூணூல் அணி விழாவையும் செய்து முடித்தார் சுந்தர பாண்டியர்.

சுந்தர பாண்டியர் பணித்தபடி தேவகுருவாகிய வியாழ பகவான் முறையே பதவொழக்கம், கனம், ஜடை, சாகை, ஆரணம் நிரம்பிய வேதக் கலைகள் எல்லாம் கற்றுக்கொடுத்தார். படைக்கலப் பயிற்சியும், யானை குதிரை ஏறிச் செலுத்திடும் பயிற்சியும் கற்பித்தார். வெகு விரைவில் உக்கிரவர்மர் அறுபத்துநான்கு கலைகளையும் ஒருங்கே அறிந்துகொண்டார். பாசுபதாஸ்ரப் பயிற்சினை மட்டும் தம் தந்தையிடத்தே கற்றுக் கொண்டார். தனது எட்டாம் வயது நிரம்புவதற்குள்ளாக எண்ணற்ற கலைகள் அனைத்தையும் கற்றுணர்ந்த பண்டிதராகிவிட்டார் உக்கிரவர்மர் !

வயதுக்கேற்ற வளர்ச்சியும், எழிலும், ஆற்றலும் ஆண்மையும், ஆடலும் காட்டி வளர்ந்து வந்தார் உக்கிரவர்மர். தமது பதினாறாவது ஆண்டிலே அழகுடன் வீரமும் காட்டி, தலைவனாகிய முருகக்கடவுளே இவர் என்று போற்றும்படிக்கு அதி தீர பராக்கிரமசாலியாக விளங்கினார் சுந்தரகுமாரர். அதிரூப சௌந்திரத் திருவாளனான உக்கிரகுமாரினிடத்தே முப்பத்திரண்டு லக்ஷணங்கள் அமைந்திருப்பதையும் அவனது சிறந்த குணங்களையும் கண்டுகொண்டார் சுந்தரபாண்டியர். தனது குமாரன் பூலோக முழுவதும் அரசாட்சி செய்ய வல்லவன் நெடுநாள் வாழ்வான்; கீர்த்தி, நீதி, சாதுரியம், பண்பாடு, சிவபக்தி, கருணை, கல்வி, எவரையும் வெல்லுதல், தேவரையும் விஞ்சுகின்ற திறமையுடைத்தாதல் உடையவனாகி உருகப் பெருஞ் சக்கரவர்த்தியாக விளங்குவான் என்று தெரிந்தார். குமாரனுக்கு முன்னதாகத் திருமணம் செய்வித்துவிடுவோம்; அதன் பின்னர் மகுடாபிஷேகம் செய்வோம் என்று திருவுள்ளம் கொண்டு சுமதி முதலிட்ட மந்திரியர்களோடு கூடி ஆராய்ந்தார்.

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

– பதிப்பாசிரியர்